ஸ்ரீவாதிபீகாமகாகுரவேநம:

## ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கர மண்ணா வைபவம்

மாயிமதங்கஜமஸ்தக கோடிபாடநபாடலபாணிதலோய:
ச்ருத்யடவீகுஹரேஷுஸமிந்தே ஸப்ரதிவாதி பயங்காஸிம்ஹ:॥
அகலிம்கவயந் அபடும் படுயந் அபுதம்புதயன் அகுரும்குருயந்
பரவாதி பயங்கர பாதரஜ: பரமாணுபராக்ரம உல்லஸதி॥

ஸ்ரிய:பதியான ஸர்வேச்வரன், தனது ஸர்வேச்வரத்வத் துக்கனுகுணமாக, ஸம்ஸாரிகளது நோவுபாட்டைக் கண்டு மிக வருந்தித் தன தின்னருளால் ஸம்ஸாரிகளுக்குத் தன்னைத் தொழும்படியான சரீரத்தையும், தொழும் வகையை விவரிக்கும் சாஸ்திரங்களையும், முதன்முதலாக உண்டாக்கித் தந்தான். மேலும், தானே ராமகிருஷ்ணாதி பல அவதாரங்களெடுத்து அவ்வனுஷ்டானங்களை அனுஷ்டித்தும் அனுஷ்டிப்பித்தும் போந்தான். அதிலும் குறைவுபாட்டைக் கண்டு ஸேனைமுதலியாரானோரை ஆழ்வார் ஆசாரியராதியராய் அவதரிப்பித்தும், தானும் பின்னானார் வணங்குஞ் சோதியாய்க் கோயில் முதலான நூற்றெட்டு திவ்விய தேசங்கள்தோறும். அர்ச்சாரூபியாய் எழுந்தருளி ஸம்ஸாரிகளான நம்மைத் துன்பம் மாற்றி இன்பமுறுமாறு செய்து கொண்டிருக்கிறான்.

''ஸ்ரீ சேஷாம்சரான எம்பெருமானார் மணவாள மாமுனிகளாய் அவதரித்தபோது தேவப்பெருமாளம்சரான கூரத்தாழ்வான் ப்ரதிவாதி பயங்கர மண்ணாவாக அவதரித்தார்'' என்று பெரியோர் புகழ்ந்து பேசுமாறு தூப்புல் அக்ரஹாரத்தில் எழுந்தருளியுள்ள வாத்ஸ்ய முடும்பை அனந்தாசாரியார், அவர் தேவிகள் ஆண்டாள் இருவருக்கும் திருக்குமாரராய் கலி 4463 பிலவ வருஷம் ஆடி மாதம் கிருஷ்ண சதுர்தசி வியாழக்கிழமை புஷ்ய நக்ஷத்திரம் கூடின. சுப முகூர்த்தத்தில் அண்ணா அவதரித்தருளினார். பெற்றோர் மனமுவந்து ஜாதகர்மம் முதலான ஸம்ஸ்காரங்கள் அனைத்தையும் சாஸ்த்ரப்படி நடத்தினர். ''ஹஸ்திகிரிநாதர் அண்ணா'' வென்று திருநாமம் சாற்றி உசித காலத்தில் உபநயனமும், பஞ்ச ஸம்ஸ்காரமும் செய்தருளினர். அண்ணாவின் அவதாரத் தனியன்.

கல்யப் தேலஷிபாவகே ப்லவ சரத்யார்க்கேகதே கர்கடம்
பக்ஷேந்த்யே குருவாஸரேகலிதிதௌருக்ஷே ஸுராணாம் குரோ:
ஸ்ரீவத் ஸாந்வய ஸிந்து சீதகிரண: ச்ருத்யந்த கூடார்த்தத:
காஞ்ச்யாமா விரபூத்தயாதி மஹித: ஸ்ரீவாதிபீக்ருத்தரு॥

என்பது. பகவந்நியமனத்தினால் குமாரவேதாந்தாத்சாரியர் என்னும்

நயனாராசாரியார் ஹஸ்திகிரிநாதரண்ணாவை விசேஷ கடாக்ஷம் செய்தருளி ஸ்ரீ பாஷ்யச்ருத ப்ரகாசிகாதி வேதாந்த கிரந்தங்களைப் பரிபூர்ணமாகக் கற்பித்தருளினார்.

நயனாராசாரியார் வயோதிகராய் வாதப்போருக்கு அசக்தராய் இருக்கும் நாளில் திருஸிம்ஹமிச்ரன் என்னும் மாயாவாதியை ஆசாரியானுக்ரகத்தாலே எதிர்சென்று வாதப்போரில் ஜயித்து வந்தார். ஹஸ்திகிரிநாதரண்ணா. நயனாராசாரியார் ஹஸ்திகிரிநாதரண்ணாவை வாரீர். ''ப்ரதிவாதி பயங்கரரே'' என்று வரவழைத்து ஆலிங்கனஞ் செய்து ஞானபுத்திரராக அபிமானித்தபடியால் அது முதல் ''ப்ரதிவாதிபயங்கரமண்ணா'' என்கிற பெயர் ப்ரஸித்தமாயிற்று. ந்ருஸிம்ஹமிச்ரனும் அண்ணாவின் திருவடிகளிலாச்ரயித்து ''ஹயக்ரீவ வரததாஸர்'' என்னும் தாஸ்ய நாமம் பெற்று அண்ணாவிஷயமாக,

அநந்தார்யாத்மஜம் வாத்ஸ்யம் தத்பாதாப்ஜமது வ்ரதம்।
வந்தே ஹஸ்த்யத்ரி நாதார்யம் வரதார்யாத்த பாஷ்யகம்॥
என்கிற தனியனனுஸந்தித்தார்.

அண்ணா பெருந்தேவியார் என்னும் தன் தேவியாருடன் காஞ்சியில் வரதனுக்குச் சாலைக்கிணற்றுத் தீர்த்தம் கொண்டுவருதல்முதலான கைங்கர்யங்களைச் செய்துவரும் நாளில் மூன்று குமாரர்கள் அவதரித்தனர்.

ஆந்திர தேசத்தில் மண்டலாதிபதியான வீரநரசிம்மராயன் என்பவன் அண்ணாவின் வைபவத்தில் ஈடுபட்டு அண்ணாவை ஆசாரியனாக ஆச்ரயித்தான். பிறகு சிலநாள் திருமலையில் திருவேங்கடமுடையானுக்கு ஆகாச கங்கையினின்றும் திருமஞ்சனம் எடுத்துவந்து கைங்கரியம் செய்துவரும் நாளில் ஒருநாள் கோயிலில் நின்றும் (ஸ்ரீரங்கமிருந்து) எழுந்தருளின ஸ்ரீ வைஷ்ணவர் மூலமாக ஸ்ரீ மணவாள மாமுனிகள் வைபவங்கேட்டு அவரை சேவிக்க விருப்பமுடன் எழுந்தருளியிருந்தார்.

ஸ்ரீ மணவாள மாமுனிகளும் பரபக்ஷ ப்ரதிக்ஷேபம் செய்து (வேற்று மதத்தை நிரஸித்து) ஸ்வபக்ஷ ஸ்தாபனம் (தன்மதம் நிலைநிறுத்தல்) செய்ய வல்லவரான ப்ரதிவாதி பயங்கர மண்ணாவைக் கோயிலிலே தம்மருகில் நித்தியவாஸ ரஸிகராயிருக்கச் செய்யக் கோலி ஸ்ரீ வைஷ்ணவ ரொருவரை அண்ணாவை அழைத்துவர அனுப்ப, அண்ணாவும் மணவாளமாமுனிகளை ஸேவிக்க விருப்பத்துடன் கோயிலுக்கு எழுந்தருளினார்.

பகவத் விஷயத்தில் ''ஒன்றும் தேவும்'' என்னும் திருவாய் மொழி ப்ரவேச காலக்ஷேப ஸமயத்தில் அண்ணா, மணவாள மாமுனிகள் ஸமீபம்

எழுந்தருள மணவாளமாமுனிகள் காலக்ஷேபத்தை நிறுத்தி ''நீர் ப்ரதிவாதி பயங்கரரன்றோ .காலக்ஷேபத்தில் பிழைகாணில் என்னாவது!'' என்று முறுவல் செய்தவண்ணமே யருளிச் செய்ய, அண்ணாவும் ''பரகோஷ்டியில் ப்ரதிவாதி பயங்கரனாகிலும் ஸ்ரீ வைஷ்ணவ கோஷ்டியில் அவர்களுக்குத் தாஸன் அடியேன்'' என்று விண்ணப்பஞ் செய்ய, அதுமுதல் அண்ணாவுக்கும் அவரை ஆச்ரயித்தவருக்கும் ''ஸ்ரீ வைஷ்ணவ தாஸன்'' என்ற தாஸ்ய நாமம் நிலைநின்றதாயிற்று. மறுபடியும் அண்ணா மணவாள மாமுனிகளின் அவ்தார வைலக்ஷண்யத்தில் ஈடுபட்டு நம்பெருமாள் நியமனமும் பெற்று ஸகுடும்பராய் மாமுனிகளிடம் பஞ்ச ஸம்ஸ்காரம் பெற்று சரமபர்வமான ஆசாரிய நிஷ்டையில் நிலைநின்று எழுந்தருளியிருந்தார்.

பின்பு மணவாளமாமுனிகள் அண்ணாவை ஸ்ரீ பாஷ்ய சிம்ஹாஸனத்திலமர்த்தி கந்தாடையண்ணன், ஜீயர் நாயனார் முதலானோர்க்கு ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேபம் ஸாதித்தருளும்படி நியமித்தார். அப்பொழுது தனியன் அநுஸந்திப்பதற்காக மணவாள மாமுனிகள்,

வேதாந்த தேசிக கடாக்ஷவிவ்ருத்த போதம்

என்று தொடங்க, அண்ணா

காந்தோபயந்த்ருயமின: கருணைகபாத்திரம்।

என்று அநுஸந்திக்க, அங்குள்ளார்,

வத்ஸாந்வவாயமநவத்யகுணைருபேதம்

பக்த்யாபஜாமி பரவாதிபயங்கரார்யம்

என்று முடிக்க, ''இத்தனியனை ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேப ஆத்யந்தங்களில் (ஆரம்பத்திலும் முடிவிலும்) அநுஸந்தியுங்கள்'' என்று நியமித்தருளினார். (பிறகு அண்ணாவிற்கு இத்தனியனே ப்ரஸித்தமாயிற்று.) மேலும் தமது திருவாராதனத்திலுள்ள ''வீதியார வருவான்'' என்னும் சதுர்புஜ வேணுகோபாலனை அண்ணாவுக்குத் திருவாராதனார்த்தமாகத் தந்தருளினார். பின்பு ஒரு சமயம் அண்ணா ஒரு புரட்டாசித் திருநாளன்று திருமலையில் ஸர்வக்ஞமிச்ரனுடன் வாதஞ்செய்து வெற்றிகொண்டு திருவேங்கடமுடையான் அநுக்ரஹமாக இரண்டு சாமரம் முதலான பரிசு பெற்றார். நூற்றெட்டுத் திருப்பதி எம்பெருமான் விஷயமான ஸுப்ரபாதம், ப்ரபத்தி, மங்களம் முதலான கிரந்தங்கள் அருளிச்செய்து ஸ்ரீவிசிஷ்டாத்வைத ஸுத்த ஸத்ஸம் ப்ரதாயம் மேன்மேலும் தழைத்தோங்க தர்சன நிர்வாஹம் செய்துகொண்டு தொண்ணூற்றிரண்டு திருநக்ஷத்ரங்கள் இவ்விபூதியில் எழுந்தருளியிருந்து கலி 4556 ஸ்ரீமுகஞூ பங்குனிமீ சுக்லபக்ஷ நவமிதிதி புதன்கிழமை புஷ்ய நக்ஷத்ரம் கூடிய தினத்தில் பெரிய

ஜீயர்'' என்று பிரஸித்தரான ஸ்ரீ மணவாள மாமுனிகள் திருவடிகளைத் தியானித்துக்கொண்டு திருநாட்டுக் கெழுந்தருளினார்.

## அண்ணாவின் சரமத்தனியன்

அப்தே ஸ்ரீமுக நாமகே தினமணௌமீனம் கதேபாண்டரே
பக்ஷே புஷ்யப ஸம்யுதேவஸு திகௌதாரேயவாராந்விதே
ஸ்ரீமான் வத்ஸ குலாம்பு தீந்துரநக: ஸ்வாசார்ய தத்தாத்மதீ:
ஸ்ரீவைகுண்ட மகாத் அகுண்ட விபவ:ஸ்ரீவாதி பீக்ருத்குரு:॥

பிறகு தன்னடியார்களிடமுள்ள பேரருளினால் ஸ்ரீரங்கம் ஸ்ரீபெரும்புதூர், காஞ்சீபுரம், திருநாங்கூர், திருநாராயணபுரம் திருப்பதி முதலான திவ்விய தேசங்களில் அர்ச்சாருபியாய் எழுந்தருளி இப்பொழுதும் அண்ணா சேவை சாதித்து வருகின்றார்.

மங்களம் குருவர்யாய மங்களம் குணஸிந்தவே।
ஸ்ரீ வாதி பீகரார்யாய நித்ய ஸ்ரீர்நித்ய மங்களம்॥
ஸ்ரீ ப்ரதிவாதி பயங்கரமண்ணா திருவடிகளே சரணம்.

.............

ஸ்ரீ ப்ரதிவாதிபயங்கரமண்ணாவின் வாழித்திருநாமம், நாள்பாட்டு

மன்னுபுகழ் மணவாள முனிக்கன்பன் வாழியே
மாறன் சடகோபன் மொழி வழுவாதான் வாழியே
அன்றையிலுமடைந்தவர்பால் அருளுடையோன் வாழியே
அடைவுடனே வேதாந்த மறிந்துரைத்தான் வாழியே
என்னையுந்தன் இன்னருளால் எடுத்தளித்தான் வாழியே
இரண்டுலகும் தன்புகழை யேத்துமவன் வாழியே
பன்னுகலையாழ்வார்கள் பதமுடையோன் வாழியே।
பரவாதி பயங்கரனார் படியிலென்றும் வாழியே.

எத்திசையும் புகழோங்கி வளர்ந்திட வந்து பிறந்திடுநாள்
ஏரணி கீர்த்தி எம்பெருமானார் தம் தரிசன மேய்ந்திடுநாள்
பக்தி விரத்திகள் பாங்கினி லோங்கிடப் பாரினை யுய்த்திடுநாள்
பாவனமாகிய பரமபதங்தனில் வாசல் திறந்திடு நாள்
முத்திதரும் நகரேழினில் சீரிய கச்சி விளங்கிடு நாள்
முன்னவரருளிய மொழிகள் விளங்கிட வீறு பெறுத்திடு நாள்
ஒத்த முடும்பைக் குலத்திலோர் சீரியவாதி பயங்கரனார்
உலகில் உதித்திடு நாள் திருவாடியில் புஷ்யமெனும் நாளே,

மாலைபுனை தோளான் மணவாள மாமுனிவன்
கோலம் மறவாத கொண்டலே - பாலமுதம்
என்னும் பரவாதி பயங்கர மண்ணனே
இன்னமொரு நூற்றாண்டிரும்.